# சீவபிரஹ்ம ஐக்கியம்

## “தத்வமஸி”

(நீ அதுவாகவே இருக்கிறாய்!)



சுவாமி பிரபஞ்சநாதன்

# நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| **நூலின் பெயர்** | : | சீவபிரஹ்ம ஐக்கியம் |
| **ஆசிரியர்** | : | சுவாமி பிரபஞ்சநாதன் |
| **மொழி** | : | தமிழ் |
| **வகை** | : | வேதாந்தம் |
| **முதற்பதிப்பு** | : | 2023 |
| **நூலின் அளவு** | : | டெம்மி |
| **பக்கங்கள்** | : | 33 |
| **தாள்** | : | A4 [8.03” X 11.07”] |
| **எழுத்து அளவு** | : | 14 புள்ளிகள் |
| **உரிமை** | : | அனைவருக்கும் |
| **கட்டமைப்பு** | : | சாதா பைண்டு அட்டை |
| **கணினி அச்சு** | : | ஓம் கிராபிக்ஸ் |
| **நன்கொடை** | : | அகவிழிப்பு |

# முகவுரை

முற்காலத்தில் தவம் செய்து வந்த முனிவர்களில் பலரும் இந்த உடல் தத்துவத்தை தெள்ளத் தெளிவாக உணர்ந்திருந்தனர். பஞ்சபூதங்களில் **மண்** எனும் தத்துவமே பருவுடலாக தன்மாற்றம் பெற்றிருப்பதைத் தெளிவாக அறிந்திருந்தனர். உடல் செல்கள் அழிந்தால்தான் உயிர் அழியும் என்பதை அனைத்து அறிஞர்களும் (ஞானிகளும்) அறிவுறுத்துகிறார்கள்.

பொதுவாக, மரங்களிலுள்ள உயிரணுக்கள் பஞ்சபூதங்களின் பௌதீக மாற்றத்தினால் **கல்** போன்று மாறிவிடுவதை **விஞ்ஞானம்** கண்டறிந்து இருப்பதுப்போல, மனித உடலில் உள்ள செல்களையும் பஞ்சபூதங்களைக் கையாண்டு **மண்** போன்று மாற்றுவற்கான மார்க்கத்தை நமது **மெய்ஞானம்** கண்டறிந்து இருக்கிறது.

உடல் செல்களுக்கான மூலப்பொருளாகிய விந்துநாத சக்தியைப் பதங்கப்படுத்தி உடல் மண்ணுக்குள் புதைக்கப்பட்டாலும், உயிர் இந்த உடலை விட்டுப் பிரியாது பல காலங்கள் நீடித்து இருக்க வைக்க, விந்துநாத சக்தியை உடல் செல்களிலேயே பதங்கப்படுத்திய பல சித்தர்களும் இந்த பாரத மண்ணில்தான் தோன்றியுள்ளனர். அத்தகைய அழிக்க முடியாத வஜ்ர உடலைக்கொண்டு, அவர்கள் இந்த மனித சமுதாயத்திற்காக பல ஆண்டுகள் வாழ்ந்து, மனிதன் அடையத்தக்க **மரணமில்லாப் பெருவாழ்வு நிலை** பற்றி பலருக்கும் போதித்திருக்கின்றனர்.

இவர்களே ஒரு கால கட்டத்தில் தங்களது மன இயக்கத்தை நிறுத்தி உணர்ச்சி நிலைகளைக் கடந்த, தன் சொரூபமாகிய உணர்வு நிலைக்கு திரும்பி தங்கள் பரு உடல் வாழ்க்கையை போதுமெனக்கருதி முடித்துக் கொண்டனர்.

இந்நிலையை அடைய மனத்தை இறைநிலையோடு இருக்கச் செய்தும் உடலுறுப்புகளின் இயக்கத்தை நிறுத்தச் செய்தும், இந்த உடலை மண் உள்ள காலம் மட்டும், அந்த மண்ணோடு மண்ணாக அழியாத நிலையையும் ஏற்படுத்திக் கொண்டனர். அத்தகைய சித்தர்களின் உடல் அடக்கம் பெற்ற கோவில்களைத்தான் நாம் **சித்தர்களின் சீவசமாதிகள்** என்று கூறுகின்றோம்.

இயற்கையில் நம் உடலுக்கு அமைந்திருக்கும் ஆயுட்காலத்திற்குள் அவசியம் நாம் ஒவ்வொருவரும் முயன்று, பிறவாப் பெருநிலையாகிய **முக்தி** நிலையை நிச்சயம் அடைய முடியும். அத்தகைய இச்சமாதி நிலையை அடைவதற்கு முன்னால், உடலில் உண்டான நோயின் காரணமாகவோ, விஷ ஜந்துக்கள், விபத்துக்கள் போன்ற பிற காரணங்களாலோ உடல் சிதைந்து உயிர் பிரிந்து விடுமானால், அதுதான் உடலுக்கு **மரணம்** எனப்படுகின்றது.

உடலுக்கு மரணம் ஏற்படுவதற்கு முன்னர், தாம் வாழும் காலத்திலேயே, அதாவது, இந்த உடல் சீவிக்கின்ற சீவகாலத்திலேயே முக்தி அடைவதுதான் **சீவ பிரஹ்ம ஐக்கியம்** அல்லது '**மரணமில்லாப் பெருவாழ்வு**' எனப்படுகின்றது.

பெரும்பாலும், மனிதன் முதலான அனைத்து சீவர்களும் தங்களுக்கு கொடுக்கப்பட்ட புலன்களின் மயக்கத்திலேயே அதிகமாக சிக்கிக்கொண்டு, அதனால் சுக, துக்கங்களை அடைந்து, அவைகளை அனுபவிக்க முடியாமல் அல்லல்படுவதைப் போன்றே இந்த மனிதனும் அதிகம் அல்லல்படுகின்ற வாழ்க்கையைத்தான் வாழ விரும்புகின்றான். அதன்காரணமாக, மற்ற சீவர்களைப் போன்றே, மனித வாழ்வின் உயரிய நோக்கமான '**இறை நிலையுணர்தல்**' அல்லது **தன்னையுணர்தல்** என்ற தன்மையை இழந்து விடுகின்றான்.

தற்போதுள்ள கல்விமுறையில் தன்னையறிவதற்கான வழிமுறைகள் கண்டிப்பாக இல்லை. ஆகவே, தற்போதைய கல்வி முறையில் கட்டாயம் **1) பாலுணர்வுக்கல்வி, 2) ஆன்மீகக்கல்வி** ஆகிய இந்த இரண்டு கல்வி முறைகளைப் பற்றிய விழிப்புணர்வுப் பாடங்கள் கொண்டுவர வேண்டும்.

சீவர்கள் பெரும்பாலும் இன்பத்தை மையமாக வைத்தே இயங்குகின்றன என்பதினால், உடல் சார்ந்த **பாலுணர்வு** என்பது, அவைகளுக்கு சிற்றின்பத்தையும், உள்ளம் சார்ந்த **ஆன்மீகவுணர்வு** என்பது அவைகளுக்கு பேரின்பத்தையும் தருகின்றன. அதிலே, ஆன்மாவைப் பற்றி அறிதல் என்பது ஆறாம் அறிவாகிய அற்புத மனம் படைத்த மனிதனுக்கு மட்டுமே சாத்தியம் என்பதினால், இவன் முயன்றால், இவனது வாழ்க்கையை இன்பமயமாக மாற்றிக்கொள்ள முடியும்.

ஆகவே, சிற்றின்பத்தின் வாயிலாக உடல் நோயையும், பேரின்பத்தின் வாயிலாக உள்ளத்தின் உயரிய ஆற்றலையும் ஒருவன் பெறமுடியும் என்பதினால், அவனுக்கு எதில் ஆர்வமுள்ளதோ, அதை நோக்கியே அவன் அதிக ஆர்வத்துடன் ஈர்க்கப்படுகின்றான் என்பதினால்தான், எல்லோருக்கும் இந்த இரண்டு விசயங்களையும் கல்வி முறையில் கட்டாயம் கற்றுக் கொடுக்க முன் வரவேண்டும்.

மனிதர்கள் உடல் அளவில் ஆரோக்கியமாக வாழவேண்டுமானால், அவர்களது உயிர்ச்சக்தியாகிய விந்துநாதசக்தி, அதிகம் விரையமாகாமல் தடுக்கப்பட வேண்டும். அதற்கான ஆயத்தங்களை உண்டாக்கும் அதியுன்னத தளம் ஒன்று உண்டென்றால், அது மனிதர்களது **மனம்** மட்டுமே ஆகும். அத்தகைய மனதை நல்ல விசயங்களில் பயிற்றுவிப்பது என்பது, படிக்கின்ற பருவங்களில் மட்டும்தான் அமைந்துள்ளது என்பதினால், கற்கும்போதே கற்பவைகளை கசடற கற்றல் நலம்.

பொதுவாக மனித உடலில் உயிர்சத்து அதிகரித்து, அவர்களது ஆரோக்கியம் அதிகமாக வேண்டுமானால், விந்துநாதம் தூய்மையாக இருக்க வேண்டும். அது ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும், தங்களது இல்லற தர்மத்திலே சில இன்றியமையாத கட்டமைப்புகளைக் கட்டாயம் கொண்டுவர வேண்டும்.

விந்துநாத சக்தியின் அளவு அதிகமாகவும், அழுத்தமாகவும், தூய்மையாகவும் ஆக்கிக்கொண்டால், அவர்கள் நீண்ட நாட்கள் நோயின்றி ஆரோக்கியமான உடலுடன்கூடிய உயர் வாழ்க்கையை வாழ முடியும். அத்துடன், முதுமையைக்கூட தள்ளிப்போட்டு, என்றென்றும் இளமையோடு இருக்கவும் இவர்களால் மட்டுமே முடியும்.

அவ்வாறு, இளமையோடு, நோயின்றி நீண்டகாலம் ஒருவர் வாழ்வது எதற்காக? என்றால், என்றும் அழியாத அந்த ஆன்மாவைப் பற்றி அறிந்துக் கொண்டு, அதைத் தன் சொரூபமாக உணர்ந்துக்கொண்டு, '**யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்!**' என எல்லோருக்கும் இந்த அரிதான மனிதப்பிறவியின் மகத்துவம் பற்றி எடுத்துக்கூறி, என்றும் அழியாத அந்த ஆன்ம இருப்பில் என்றென்றும் நிலைத்திருப்பதற்காகவே ஆகும்.

ஆகவே, மனதின்கண் மாசற்றவர்களாக மாற விரும்பும் மானிடர்கள் மட்டுமே, அவசியம் இதுப்போன்ற சாஸ்திர விசாரங்களைத் தக்க சத்குருவின் வாயிலாகக் கற்றுக்கொண்டு, அதிலுள்ள சந்தேகங்களை அவரிடமே கேட்டுத் தெளிந்துக்கொண்டு, அவர்கூறிய அந்த உபதேச வார்த்தைகளைக் கேட்டதின் மூலம் **(சிரவணம்),** அதைப்பற்றி அடிக்கடி சிந்தித்து **(மனனம்),** அவற்றிலேயே நிலைத்து நின்று **(நிதித்யாஸனம்),** அதன் வாயிலாக பெறப்படுகின்ற மகத்தான மனத்தூய்மை மட்டுமே, மனிதனை புனிதனாக்கும் அந்த ஆதிக்குச் சமமான நிலைக்கு அவர்களை அழைத்துச் செல்கின்றது. இதுவே, **சீவபிரஹ்ம ஐக்கியம்** எனப்படுகின்றது.

நன்றி!

என்றும் அன்புடன்,
**சுவாமி பிரபஞ்சநாதன்**



# சீவபிரஹ்ம ஐக்கியம்

வேதாந்த பாடங்களில் வருகின்ற மஹா வாக்கியங்களில் மிகவும் பிரசித்தி பெற்ற வாக்கியம் "**தத்வமஸி**" என்பதாகும். அதிலே, '**தத்**' என்ற பதத்திற்கு "**அது**" என்றும் '**துவம்**' என்ற பதத்திற்கு "**நீ**" என்றும் '**அஸி**' என்ற பதத்திற்கு "**இருக்கிறாய்**" என்றும் பொருள் கொள்ள வேண்டும்.

இதிலே '**அஸி**' என்ற பத விஷாரம். உபநிஷத்தில் சீவனுக்கும், பிரஹ்மனுக்கும் உள்ள சம்பந்தம் என்ன என்பதில், அவர்கள் இருவரும் ஒன்றாகவே இருக்கிறார்கள் என்பதை எடுத்துக் கூறுகின்றது. அந்த வகையிலே "**தத்வமஸி**" என்பது '**நீ அதுவாகவே இருக்கின்றாய்**' என்பதாகும்.

'**தத்**' என்றால் "**ஈஸ்வரன்**" ஆகிய அந்த இறைவனும், '**துவம்**' என்றால் மனிதனாகிய "**நீ**"யும் '**அஸி**' என்றால், "**அதுவாகவே இருக்கின்றீர்கள்**!" என்று கூறப்படுகின்றது.

இங்கு "**நீ**" என்ற சொல் சீவனைக் குறிக்கின்றது. "**அது**" என்ற சொல் ஈஸ்வரனைக் குறிக்கின்றது. "**இருக்கின்றாய்**" என்ற சொல் ஐக்கியத்தைக் குறிக்கின்றது.

இந்த "**தத்வமஸி**" என்ற வாக்கியம் **சீவனும், பிரஹ்மமும்** ஒன்று என்ற தத்துவத்தை குறிக்கின்றது. ஆகவே '**அஸி**' பத விஷாரம் என்றால், ஐக்கிய விஷாரம் ஆகும்.

இரண்டு பொருட்கள் எடுத்துக்கொள்ளப்பட்டு, இரண்டு பொருட்களும் ஒன்று என்று இங்கு கூறப்படுகின்றது என்றால், எப்பொழுது கூற முடியும், எப்பொழுது கூறமுடியாது, ஏன் கூறவேண்டும்?, ஏன் கூறமுடியாது? என்பதை சற்று விரிவாகப் பார்க்கலாம்.

அதாவது, இரண்டு வெவ்வேறான பொருட்களை எடுத்துக்கொண்டு அவைகள் இரண்டும் ஒன்று என்று கூறமுடியாது. உதாரணமாக, எண்கள் (5), (6) இந்த இரண்டும் ஒன்று என்று கூறமுடியாது. அதாவது ஐந்து என்ற எண்ணை ஆறு என்ற எண்ணுடன் சமப்படுத்த முடியாது.

அதுபோலவே, **ஐந்து = ஐந்து** என்றால், அதனை சமப்படுத்த முடியுமா? என்றால், அது அவசியமே இல்லை, ஏனெனில், **5 = 5** என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்க முடியாது. ஆகவே, இதனை சமப்படுத்த வேண்டிய அவசியமில்லை.

அப்படியானால், எந்த இரண்டை எடுத்துக்கொண்டு, அவைகளை சமப்படுத்த வேண்டிய அவசியம் உருவாகும் என்றால், ஒரு பக்கம் [2 + 3] என்று இருக்கின்றது. மற்றொரு பக்கம் [6 - 1] என்று இருக்கின்றது. அப்படி இருந்தால் அந்த இரண்டையும் ஒன்றாகச் சமன்படுத்தி **5** என்ற ஒரே விடையை கொடுப்பதற்கு ஒரு சிறு குழந்தையினால்கூட எளிதாக முடியும்.

ஆகவே, எந்தச் சூழ்நிலையில் சமன்படுத்த வேண்டிய நிலை ஏற்படும் என்றால், முற்றிலும் ஒன்றாக இருந்தால் சமன்படுத்த முடியாது. முற்றிலும் வேறாக இருந்தாலும் சமன்படுத்த முடியாது.

பிறகு, சமன்பாட்டுக்கு ஒரே ஒரு நிபந்தனை என்னவெனில் உண்மையில் முற்றிலும் வேறுபடாமல், ஆனால் தோற்றத்தில் வேறுபட்டது போல எப்பொழுது இருக்கின்றதோ, அப்பொழுதுதான் சமன்பாடே உருவாகும் என்பதை அறிந்துக் கொள்ள வேண்டும்.

ஆகவே, நம் நடைமுறை வாழ்க்கையில் எந்தெந்த இடத்திலெல்லாம் நாம் சமப்படுத்துகின்றோமோ, அதுதான் இது என்று கூறுகின்றோமோ? அந்த இடத்தில் நிபந்தனை என்னவென்றால், உண்மையில் ஒன்றாக இருந்து, உண்மையில் வேறுபடாமல் இருந்து, ஆனால் தோற்றத்தில் வேற்றுமையுடன் இருந்தால் அப்பொழுதுதான் சமப்படுத்த வேண்டிய கட்டாயம் உள்ளது.

இந்த ஒரு நியதியை வேதாந்த பாடத்திற்குள் நாம் கொண்டுவந்து சமன்படுத்தச் செய்கிறோம்.

அதாவது, சீவன் என்ற (நான்) இருக்கிறேன். எனக்கு வேறாக ஈஸ்வரன் என்ற ஒருவர் இருக்கிறார் என்று கருதுகிறோம். அப்படி இருக்குபோது, இப்பொழுது சீவனுக்கும், ஈஸ்வரனுக்கும் ஒரு சம்பந்தம் இருக்க வேண்டும். அது என்ன சம்பந்தம்? அதாவது எந்த வகையில் இருவருக்கும் உறவு? என்றால், நம்மைப் பொருத்தவரை ஈஸ்வரன் படைப்பவன். நாம் படைக்கப்பட்டவர்கள் என்று நினைக்கிறோம்.

அந்தவகையிலே, **சீவ தத்துவம், ஈஸ்வரத் தத்துவம்** என்ற இரண்டுக்கும் எந்த வகையிலே சம்பந்தம் இருக்கின்றது? என, இந்த இரண்டு தத்துவங்களையும் சமன்படுத்திப் பார்ப்பதே '**ஐக்கியம்**' என்று கூறப்படுகின்றது.

எப்படி, இந்த ஜீவனும், ஈஸ்வரனும் ஒன்று என்று கூறுகின்றது என்றால், 2 + 3 = **5**, மற்றும் 6 - 1 = **5** என்று சமன் படுத்துவது போல, சீவனும் ஈஸ்வரனும் தோற்றத்தில் வேறு வேறாக இருப்பினும் ஒன்று என்று இங்கு சமன் படுத்தப்படுகின்றது.

அப்படி, சீவனையும், ஈஸ்வரனையும் ஒன்று என்று உபநிஷத்துகளில் வருகின்ற எந்த வாக்கியம் கூறுகின்றதோ?, அந்த வாக்கியத்தைத்தான் நாம் '**மஹா வாக்கியம்**' என்று கூறுகின்றோம்.

**மஹா** என்றால் **மிகப்பெரிய** என்று பொருள்.

ஆக, மிகப்பெரிய பலனைக் கொடுக்கக்கூடிய வகையில் உள்ளதால், இதை **மஹாவாக்கியம்** என்று கூறப்படுகின்றது. இந்த மஹாவாக்கியம் சீவனையும், ஈஸ்வரனையும் ஐக்கியப்படுத்துகிறது.

ஆக, ஏற்கனவே எந்த ஒரு ஐக்கிய சூழ்நிலையிலும் இரண்டு நிபந்தனைகள் உள்ளது எனப் பார்த்தோம். அதாவது, உண்மையின் அடிப்படையில் இரண்டும் ஒன்றாக இருக்க வேண்டும். ஆனால், தோற்றத்தின் அடிப்படையில் வேறுபட்டு இருக்க வேண்டும்.

அதாவது, மேலோட்டமாக பார்த்தால் ஒற்றுமை தெரியாது. ஆனால், அதை விசாரணை செய்துப்பார்த்தால், இரண்டும் ஒன்று என்ற ஒற்றுமை தெரியும்.

சீவனுக்கும், ஈஸ்வரனுக்கும் உள்ள சம்பந்தமானது பிரிக்க முடியாத ஒன்று என்ற பொருளில், அதை ஐக்கியம் செய்ய '**தத்வமஸி**' என்ற மஹாவாக்கியம் நமக்கு உபதேஷம் செய்கின்றது.

எப்படிப்பட்ட சீவன், எப்படிப்பட்ட ஈஸ்வரன் என்றால், நாம் ஏற்கனவே சீவனுடைய வார்த்தையை எடுத்துக்கொண்டு, "**துவம்**" என்ற '**நீ**' பதத்தின் அர்த்தமாகிய, அதாவது சீவனாகிய நம்மை நாம் விசாரணைக்கு எடுத்துக் கொண்டு, அதற்கான ஐந்துகோஷங்களைப்பற்றி பார்த்து, அவைகள் அனைத்தும் ஆத்மாவை மூடிக்கொண்டுள்ளது என்று அறிந்தோம்.

அந்தவகையிலே, ஐந்துகோஷங்களும் நானல்ல, மூன்று சரீரங்களும் நானல்ல. அவைகளைப் பிரகாஷப்படுத்துகின்ற "**அறிவு**" ஸ்வரூபமான சைதன்யம்தான் '**நான்**' என்ற முடிவுக்கு வந்தோம்.

[**ஐந்து கோஷங்கள்:-** அன்னமய கோஷம், பிராணமய கோஷம், மனோமய கோஷம், விஞ்ஞானமய கோஷம் மற்றும் ஆனந்தமய கோஷம்.]

[**மூன்று சரீரங்கள்:-** காரண சரீரம், சூக்ஷும சரீரம் மற்றும் ஸ்தூல சரீரம்.]

பிறகு ஈஸ்வரனுடைய விசாரணையில் முத்தொழிலைப் புரிகின்ற அந்த ஈஸ்வரன் மாயையின் துணைகொண்டு, இந்த உலகத்திற்கு காரணமாக இருக்கின்றார். ஆனால், அவருடைய உண்மையான ஸ்வரூபம் '**சத்தியம், ஞானம், அனந்தம்**' என்ற "**சச்சிதானந்தம்**" என்றும் பார்த்தோம்.

அதாவது, ஈஸ்வரனுடைய ஸ்வரூபம் அறிவு ஸ்வரூபம். அதுப்போலவே, சீவனுடைய ஸ்வரூபமும் அறிவு ஸ்வரூபம். ஆக, அந்த அறிவின் மூலம் அல்லது ஆத்மாவின் மூலம் இவர்கள் இருவரும் ஒன்று என்று முடிவு செய்தோம்.

ஈஸ்வரனுக்கும் மற்றும் சீவனுக்கும் இடையேயான பொதுவான ஒன்றை எடுத்துக்கொண்டால், அதுவே **அறிவு** அல்லது **ஆத்மா** என்று கூறி, அந்த **இரண்டும் ஒன்று** என்று இங்கு ஐக்கியப்படுத்தப்படுகின்றது.

அதாவது, சீவனும், பிரஹ்மமும் ஆத்மாவால் ஒன்றே என்பதை இந்த "**தத்வமஸி**" என்ற மஹாவாக்கியம் விளக்குகின்றது.

ஆனால், அந்த ஒன்றேயாகிய பேரறிவு பிரகாசிப்பதில் உள்ள ஏற்றத்தாழ்வுகள் உபாதிகளாகிய பல்வேறு உடல்களினால்தான் ஒரு அறிவு முதல் ஆறு அறிவு வரை வேறுபாட்டுடன் பிரகாசிக்கின்றது.

(**உபாதி** என்பது இருக்கின்ற ஒன்றை இல்லாத ஒன்றின் மீது ஏற்றி வைத்தல் என்று பொருள். **உதாரணம்:-** ஸ்படிகத்தின் அருகே வைக்கப்பட்ட சிகப்பு நிற மலரின் நிறம், அந்த ஸ்படிகத்தின் மீது ஏறிக்கொண்டு அந்த ஸ்படிகம் பார்ப்பதற்கு சிகப்பு நிறமாகத் தோன்றுவது.)

அந்தவகையிலே, **தத்வமஸி** என்ற ஒரு சொல்லைக் கேட்டவுடன், அந்த சொல்லினுடைய பொருள் நம் மனதிற்கு தெரிவதுதான் **வாக்கியார்த்தம்** என்று கூறப்படுகின்றது.

உதாரணமாக, **சிங்கம்** என்று ஒரு வாக்கியத்தை கூறியவுடன் நம் மனதில் சிங்கம் என்ற மிருகம் தோன்றும். இதைத்தான் "**வாக்கியார்த்தம்**" என்கின்றோம்.

பிறகு, சில சமயங்களில் ஒரு வார்த்தை சொன்னவுடன் அதன் வாக்கியார்த்தம் பொருந்தி வராது. அந்த நேரத்தில் அந்த வாக்கியத்தின் சம்பந்தப்பட்ட வேறு ஒரு அர்த்தத்தை நாம் எடுத்தாக வேண்டும். அதே சொல் வேறு ஒரு அர்த்தத்தை தரும். அதற்கு "**இலட்சியார்த்தம்**" என்று பெயர்.

உதாரணமாக, நாம் ஒருவனைப்பார்த்து அவன் '**சிங்கம்**'டா என்கிறோம். உடனே நம்முடைய மனதில் எந்தவிதமான **வாக்கியார்த்தம்** வரும். அவனை ஒரு சிங்கம் என்று கூறியவுடன், நம் மனதில் அவனை சிங்கம் போன்ற ஒரு

மிருகமாகவா பார்ப்போம்? இல்லை! அவன் சிங்கம் போன்ற தைரியமானவன் என்று பார்ப்போம்.

ஆக, இந்த இடத்தில் வருகின்ற வார்த்தையானது வாக்கியார்த்தத்தைக் கொடுக்காமல், இலட்சியார்த்தத்தைக் கொடுக்கிறது. அந்த வார்த்தையிலிருந்து வேறு ஒரு பொருளை அந்த இடத்திற்கு தகுந்தாற்போல, நாம் எடுத்துக் கொள்கிறோம்.

இப்படித்தான் நாம் நம்முடைய வாழ்க்கையில் பல சந்தர்பங்களிலும் வாக்கியார்த்தம் பயன்படுத்தாமல், இலட்சியார்த்தம் பயன் படுத்துகிறோம். ஆனால், அதை நாம் உணர்வதில்லை.

உதாரணமாக, ஒருவர் நம்மிடம் வந்து, ஒரு மாம்பழத்தைக் கொடுத்து, **இந்தாருங்கள் இந்த மாம்பழத்தை சாப்பிடுங்கள்!** என்கிறார் என வைத்துக் கொள்ளுவோம். உடனே, நாம் என்ன செய்வோம்?. அவர் இதை சாப்பிடக்கூறியுள்ளார், ஆகவே, நாம் அந்த மாம்பழத்தை அப்படியே முழுவதுமாக தோல், கொட்டை என எதையும் நீக்காமல் அனைத்தையும் சாப்பிட்டு விடுவோமா?

இங்கு, அவர் கூறிய வாக்கியார்த்தம் **மாம்பழத்தைச் சாப்பிடுங்கள்!** என்பது மட்டும்தான், ஆனால், நாம் புரிந்துக்கொள்வது என்னவென்றால், **சாப்பிடுங்கள்** என்று சொன்னாலும்கூட, அதில் உள்ள கொட்டையை, தோலை சாப்பிடக்கூடாது, அதை நீக்கி விட்டுத்தான் சாப்பிடவேண்டும் என்பதை புரிந்து கொள்கின்றோம்.

ஆக, நாம் இடத்திற்கு தகுந்தாற்போல, அந்த வார்த்தைக்கு அர்த்தம் புரிந்துக் கொள்கின்றோம்.

[இதை ஏன்? இங்கு இவ்வளவு ஆழமாக வலியுறுத்தப்படுகின்றது என்றால், பெரும்பாலும் பலரும் சீவனும், ஈஸ்வரனும் ஒன்று என்று கூறியவுடன், இந்த உடல் அளவிலே அதை முடிவு செய்துக் கொண்டு, அந்த வார்த்தையின் உண்மைத்தன்மையை உணர மறுக்கின்றார்கள் என்பதினால் இவ்வளவு ஆழமாக இதை எடுத்துக்கூற வேண்டிய கட்டாயம் உள்ளது.]

ஆக, எந்த ஒரு வார்த்தை நம் மனதில் தோன்றுகின்ற பொருளுக்கு ஒத்து வரவிலையோ, அப்பொழுது நாம் அந்த வாக்கிய அர்த்தத்திற்கு பதிலாக, வேறு ஒரு அர்த்தத்தில், அதன் உண்மைத் தன்மையான இலட்சிய அர்த்தம் என்ன என்று பார்க்க வேண்டும். அவ்வாறு பார்ப்பதற்குப் பெயர்தான் **இலட்சியார்த்தம்** எனப்படுகின்றது.

இதுப்போல, சாஸ்திரத்தில் **சீவன், ஈஸ்வரன்** என்ற இரண்டு சொற்கள் இருக்கின்றன. நாம் கோவிலுக்கு சென்று பகவானே எனக்கு நல்ல புத்தியைக் கொடு!, நல்ல பண்புகளைக்கொடு! என்று கூறும்பொழுது, சீவன் என்பவன் ஈஸ்வரனிடமிருந்து படைக்கப்பட்டவன். நம்முடைய கர்மத்திற்கு எல்லாம் ஈஸ்வரன் பலன்களைக் கொடுப்பவர் என்றுதான் நினைக்கிறோம்.

இந்த இடத்தில் சீவனும், ஈஸ்வரனும் வேறு, வேறாகத்தான் தோன்றும், இங்கு '**தத்துவமஸி**' என்று கூறமுடியாது. காரணம், பகவானை வணங்கும் ஒரு பக்தனாக நாம் இருக்கும்பொழுது, நாம் பகவானால் படைக்கப்பட்டவர்கள், பகவான் அனைத்திற்கும் காரணமாக இருப்பவர் என்பது புரியும். அதாவது, இந்த ஸ்தூல உடல் அளவில் நாம் சாதாரணமானவர்கள், பகவான் சர்வ சக்திமான் என்பது விளங்கும்.

ஆக, சீவனாகிய நமக்கும் ஈஸ்வரனுக்கும் இந்த உடலோடு பொருத்திப் பார்க்கும்பொழுது, பல்வேறு வித்தியாசங்கள் இவ்வாறு இருக்கும்.

அது எப்படி?

பஞ்சகோஷங்களான அனாத்மாக்களை இந்த உடலோடு சேர்த்து, இந்த உடலை '**நான்**' என்று புரிந்துக்கொண்டு, ஈஸ்வரனை இந்த பிரபஞ்சத்தோடு சம்பந்தப்படுத்தி, நமக்கு வேறாகப் புரிந்துக் கொள்ளும் பொழுது, சீவனுக்கும், ஈஸ்வரனுக்கும் மிகப்பெரிய **பேதம்** காணப்படுகின்றது.

அந்தவகையிலே, **அவர் படைப்பவர், நாம் படைக்கப்பட்டவர்**.

நாம் செய்கின்ற ஒவ்வொரு செயலுக்கும் தேவையான சக்தியை அவர்தான் நமக்கு அளிக்கின்றார். அத்துடன், அவர் நம்மைக் கண்காணித்துக்

கொண்டு இருக்கின்றார். ஆகவே, நம்முடைய செயல்கள் தர்மத்திற்கு விரோதமாக போய் விடக்கூடாது, அப்படியவைகள் அதர்ம வழியிலே போய் விடுமானால், கர்மபல தாதாவாகிய ஈஸ்வரன் அதற்கான பலனை நிச்சயம் நமக்குத் தருவார் என்பதையும் ஏற்றுக் கொள்ள முடிகின்றது.

இதிலிருந்து என்ன நமக்குத் தெரிய வருகின்றது?

ஈஸ்வரனுக்குள்ளும், நமக்குள்ளும் இருக்கின்ற **சைதன்யம்** ஒன்றே என்றாலும், உடல் அளவிலேயும், சக்தி அளவிலேயும், அறிவு அளவிலேயும் காணப்படுகின்ற பேதமையினால், நாம் இருவரும் பிரிந்து உள்ளோமே தவிர, என்றும் அழியாத அந்த ஆத்மா நிலையிலே நாம் இருவரும் ஒன்றே என்பது புரியவரும்.

இதுப்புரியாமல், உபநிஷத் வார்த்தையான மஹாவாக்கியம் **தத்வமஸி** என்ற வார்த்தையைக் கூறியவுடன் நாம் உடனடியாக இந்த உடலோடு அதைப் பொருத்திப் பார்த்து, '**அது சரியாக வராது**!' என்று ஒதுக்கிவிடுகிறோம்.

அதாவது, உபநிஷதம் கூறுகின்ற '**தத்வமஸி**' - **நீ அதுவாகவே இருக்கிறாய்.** என்பதில், சீவனும், ஈஸ்வரனும் ஒன்றுதான் என்று சாஸ்திரம் கூறியதுமே, நாம் என்ன நினைத்துக் கொள்கிறோம்?

**சீவனுக்கும், ஈஸ்வரனுக்கும் ஏணி வைத்தாலும் எட்டாது** என்றுகூறி, இருவருக்கும் உள்ள வேற்றுமைகளை மட்டுமே நம் கருத்தில்கொண்டு, '**துவம்**' என்பதின் வாக்கியார்த்தம் தவறாக புரிந்துக் கொள்ளப்படுகின்றது.

அதாவது, அவன் '**சிங்கம்**'டா என்றவுடன், சிங்கம் என்ற மிருகம் நம் மனதிற்கு வருவது என்னவோ உண்மைதான், ஆனால், அவனை உடலால் நாம் சிங்கமாகப் பார்க்க மாட்டோம்.

அங்கு **சிங்கம்** என்றவுடன் அவன் மிருகம் அல்ல, சிங்கம் போன்ற வலிமை பொருந்தியவன் என்பது நமக்குப் புரியும்.

அதுப்போல, ‘**அது**’ என்ற வாக்கியார்த்தம் ஈஸ்வரன் இந்த உலகத்திற்கு காரணமாக இருப்பவர் என்றும், அவர் பேரறிவாளன் என்றும் முதலில் தோன்றும்.

அதுப்போலவே, ‘**நீ**’ என்று கூறியவுடன் அதன் வாக்கியார்த்தம் இந்த சீவன் ஸ்தூல சரீரத்தோடு கூடிய ஒரு சாதாரண சிற்றறிவாளன். அதுவே, ‘**நான்**’ என்றும் நமக்குத் தோன்றும்.

அதன் அடிப்படையிலே, இந்த மொத்த பிரபஞ்சத்திற்குக் காரணமான **பேரறிவாளனாகிய ஈஸ்வரனும்**, இந்த பிரபஞ்சத்திலே ஒரு சிறு துளியாக இருக்கின்ற **சிற்றறிவாளனாகிய சீவனும்** ஒன்று! என ஐக்கியப்படுத்த முடியாது.

அதாவது, சக்தியின் அடிப்படையே இவர்கள் இருவரையும் ஒன்றாகச் சம்பந்தப்படுத்த முடியாது. காரணம், மலைக்கும், மடுவுக்கும் உள்ள வேறுபாடு போன்ற, மிகப்பெரிய **சக்தி** வித்தியாசத்தை இங்கு காண்கிறோம்.

அப்படியானால், “**தத்வமஸி**” என்பது, எதனுடைய அடிப்படையிலே ஒன்றாகும் எனில், இந்த இடத்தில் நாம் வாக்கியார்த்தத்தை விட்டு விட்டு இலட்சியார்த்தத்திற்கு போக வேண்டும்.

உதாரணமாக, ஒருவர் நமக்கு மாம்பழத்தை சாப்பிடக் கொடுத்தால், அதில் உள்ள வித்தியாசம் புரிந்து, எந்தப்பகுதிகளை சாப்பிடுவது, எந்தப் பகுதிகளைச் சாப்பிடாமல் விடுவது என்பதை எதன் அடிப்படையில் நாம் புரிந்துக் கொள்கிறோம்?

அதாவது, அவர் **மாம்பழத்தை சாப்பிடுங்கள்** என்று கூறி நம்மிடம் கொடுத்தவுடன், அந்த வார்த்தையின் வாக்கியார்த்தத்தை மட்டும் எடுத்துக் கொண்டு, பழத்தை அப்படியே கொட்டையுடன் சேர்த்தே சாப்பிட்டு விடுவோமா?

நிச்சயம் மாம்பழத்தை கொட்டையுடன் சாப்பிட மாட்டோம். அப்படி, சாப்பிடவும் முடியாது.

ஆம்! அங்கே கூறப்பட்ட அந்த வாக்கியத்தின் பொருள் மாம்பழம் சாப்பிடுங்கள் என்றாலும், அதில் உள்ள கொட்டையை நீக்க வேண்டும் என்பது, நமக்கு எப்படித் தெரிய வருகின்றதோ? அப்படித்தான், இங்கு, **துவம்** என்று கூறியவுடன், உடனடியாக இந்த உடலோடு ஒப்பிடாமல், மாம்பழத்தில் உள்ள கொட்டையை, தோலை நீக்கி சாப்பிடுவதுப்போல, இங்கு **'தத் துவம் அஸி'** (நீ அதுவாகவே இருக்கிறாய்!) என்று கூறியவுடன், இந்த உடலில் உள்ள பஞ்சகோசங்களையும் நீக்கி, **ஆன்மா** அல்லது **சைதன்யம்** பற்றி மட்டுமே, அந்த **துவம்** வார்த்தையுடன் பொருத்தி, அதன் **இலட்சியார்த்தம்** என்ன? என்று தெரிந்துக்கொள்ள வேண்டும்.

ஆகவே, **சீவனும், ஈஸ்வரனும்** ஒன்று என்றால், அதில் உள்ள வாக்கியார்த்தத்தை எடுத்துக்கொள்வதா? அல்லது, இலட்சியார்த்தத்தை எடுத்துக் கொள்வதா? இதில் எதை எடுத்துக் கொள்வது? என்பதில் உள்ள உண்மையை நாம் அவசியம் விசாரித்துப்பார்த்து உணர வேண்டும்.

பொதுவாக, சீவனுக்கும், ஈஸ்வரனுக்கும் உள்ள வேறுபட்டைத் தருவது **உபாதி** என்ற உடல்கள்தான் காரணம் ஆகும். அதாவது, ஈஸ்வரனுக்கு இந்த மொத்த பிரபஞ்சமும் உடலாக இருக்கின்றது. அதிலே உள்ள ஒரு சிறு துளிப்பகுதி நம்மைப் போன்ற சீவர்களுக்கு பஞ்சகோஷங்கள் கொண்ட இந்த உடலாக இருக்கின்றது.

அதனால்தான் **சீவன் ஈஸ்வரன்** என்பதை **பிண்டம், அண்டம்** என்றும், **வியஸ்டி, சமஸ்டி** என்றும், **காரியம், காரணம்** என்றும், **கிஞ்சிக்ஞன், சர்வக்ஞன்** என்றும் பலவாறாகப் பிரித்துக்கொள்வது எல்லாமே இந்த உடல்களின் அடிப்படையிலேயே ஆகும்.

இந்த உடல் என்ற உபாதியினால்தான் சீவர்களுக்கும், ஈஸ்வரனுக்கும் பேதங்கள் வந்துள்ளது என்பதை ஏற்றுக்கொள்ள வேண்டும். ஆக, இந்த மொத்த பிரபஞ்சத்தின் ஒரு அங்கம்தான் நம்முடைய இந்த உடல் என்றும் புரிந்துக் கொள்ள வேண்டும்.

அந்த வகையிலே, இந்த பிரபஞ்சம் என்ற மொத்த ஈஸ்வர உடலில் ஒரு அங்கம்தான் நம்முடைய உடல் மற்றும் நம்மைப் போன்றே அனைத்து

சீவர்களின் உடல் என்று நாம் புரிந்துக் கொள்ளும்போது, உண்மையில் சீவர்களையும், ஈஸ்வரனையும் இந்த உடலாலும்கூட பிரிக்க முடியாது.

அதனால்தான் நாம் கற்சிற்பங்களில் கடவுளைக் காண்கின்றோம். அந்தவகையிலே, உணர்வு நிலைக்கு உட்பாடாத **கல்** கடவுளாக மாறும்போது, உணர்வுள்ள **மனிதன்** ஏன் கடவுளாக மாற முடியாது? இதைப்புரிந்துக் கொண்டவர்களுக்கு இங்கு **இருப்பதெல்லாம் இறைவனே!** ஆகும். எனவே, இந்த மொத்தப் பிரபஞ்சமும் நம் சாஸ்திரம் கூறுகின்ற **சகுண பிரஹ்மம்** ஆகும்.

இதுவே, நாம் அனைவரும் அறியவேண்டிய அரிதான சூக்ஷுமமாகும்.

ஆம்! சீவர்களின் உடல்கள் என்பது, அந்த ஈஸ்வர சக்தியில் உள்ள பஞ்சபூதங்களின் வெளிப்பாடு. அது ஒரு பரிமாணத்திலிருந்து, மற்றொரு பரிமாணத்திற்கு மாறிக்கொண்டே இருக்கும். அத்தகைய அந்த **ஆற்றலை ஆக்கவோ, அழிக்கவோ முடியாது. ஆனால், அதே ஆற்றலை ஒரு ஆற்றலிருந்து, வேறு ஒரு ஆற்றலாக மாற்ற முடியும்!** என்பதே இங்கு நாம் நன்கு உள்வாங்கிக் கொள்ள வேண்டிய உயரிய உண்மை ஆகும்.

ஆகவே, சீவனுக்கும், ஈஸ்வரனுக்கும் ஐக்கியம் என்று கூறும்பொழுது, அது இலட்சியார்தத்தின் அடிப்படையில்தான் கூறப்படுகிறதே தவிர, **தத்வமஸி** என்ற வாக்கியார்தத்தின் அடிப்படையில் கூறப்படுவது கிடையாது என்பதை நன்கு புரிந்துக்கொள்ள வேண்டும்.

எனவே, எல்லோரும் இங்கு என்ன புரிந்துக்கொள்ள வேண்டுமென்றால், ஈஸ்வரனுக்கு உபாதியான இந்த உடலாகிய மொத்த பிரபஞ்சமும் வந்து போகின்ற ஒரு **மாயா பிரபஞ்சம்** என்கின்றது சாஸ்திரம்.

ஏன்? அதை **மாயா** என்கின்றது என்றால், இந்த பிரபஞ்சத்திலே இருக்கின்ற அனைத்தும் தோன்றி மறைகின்ற ஒரு மாயா சக்தி. அதாவது, **நேற்று இருந்தது பலதும் இன்று இல்லை!, அதுப்போல, இன்று இருப்பது பலதும் நாளை நிச்சயம் இருக்காது!.** இதைப் புரிந்துக் கொள்ளும்போது, ஒரு ஆற்றல் வேறு ஒரு ஆற்றலாக மாறிக்கொண்டே இருக்கின்றது என்பது நன்கு தெரிய

வரும். அதேசமயம், அந்த **ஆற்றலை நம்மால் ஆக்கவோ, அழிக்கவோ முடியாது** என்பதுவும் இன்னும் தெள்ளத் தெளிவாகத் தெரியும்.

அதனடிப்படையில், இந்த ஈஸ்வர உடல் என்பது, **மகத்** தத்துவத்தின் அடிப்படையில் அமைந்துள்ளது. **மகத்** என்றால் மாயையிலிருந்து முதலில் தோன்றிய தத்துவம். சூட்சுமமான பஞ்சபூதங்கள் மற்றும் ஹிரண்யகர்பன் முதலியவைகள் **மகத்** ஆகும். இப்படிப்பட்ட தோன்றி மறையும் மாயைதான் ஈஸ்வரனுக்கு உடலாக இருக்கின்றது.

ஆகவே, உண்மையில் தோன்றி மறைகின்ற இந்த உடல்கள் என்பது ஈஸ்வரனுக்கு சொந்தமானது கிடையாது. அதன் அடிப்படையிலே, மிக அரிதான உண்மை என்னவெனில், ஈஸ்வரனுடைய மொத்த உடலாகிய இந்த பிரபஞ்சமும், அத்தகைய பிரபஞ்சத்தின் ஒரு அங்கமான நம்மைப் போன்ற அனைத்து உடல்களும் தோன்றி மறைகின்ற **மாயா சக்தி** என்பதினால், நம் இருவருக்கும் இடையே உடல் அளவிலும், சைதன்ய அளவிலும் எந்த வித்தியாசமும் இல்லை.

அதனால்தான், "**நானே ஈஸ்வரன்**", "**நானே பிரம்மம்**" என்று நம்மை நாம் கூறிக்கொள்வது, அதன் வாக்கியார்த்தத்தின் அடிப்படையில் எடுத்துக் கொள்ளாமல், இலட்சியார்த்தத்தின் புரிதலின் மூலம் ஏற்றுக்கொள்வதினால், "**அஹம் பிரம்மாஸ்மி**" என்று கூறுவதில் தவறொன்றுமில்லை.

இதுப்புரியாமல், வெறும் வாச்சியார்த்தத்தை (வாக்கியார்த்தத்தை) மட்டும் வைத்துக்கொண்டு, **அது எப்படி, நானே கடவுள் ஆக முடியும்?** என்று கேள்வி கேட்பவர்களிடம் உள்ள அறியாமையை அவர்கள் அறிவதில்லை.

அதாவது, சீவனுக்கு பஞ்சகோஷங்கள்தான் உடலாக இருக்கின்றது. அதிலே, ஸ்தூல (**அன்னமய கோஷம்)**, சூக்கும (**மனம், புத்தி போன்ற அந்தக்கரணம்)**, காரண (**ஸ்தூல மற்றும் சூக்கும)** சரீரங்களைக் கொண்ட சீவன் தோன்றி மறையும் இந்த உடல்கள் அல்ல!, அவன் என்றும் அழியாத **ஆத்ம ஸ்வரூபம்** என்பதை உண்மையில் உணர வேண்டும்.

அதையறியாமல், ஐந்துகோஷங்களோடு தன்னை அவன் சம்பந்தப் படுத்திக் கொள்ளும்போது, அவனிடமிருந்து **மூன்றுகுணங்கள்** உண்டாகின்றன.

அதாவது, சம்ஸாரியாக இருத்தல், தன்னை கர்த்தா - போக்தாவாகக் கருதுதல், அல்ப சக்திமானாக அறிதல், அத்துடன் சுக, துக்கியாக மாறுதல் போன்ற இப்படிப்பட்ட குணங்கள் கொண்டவனாக இந்த சீவன் இருக்கின்றான்.

ஆகவே, சுத்த சைதன்யமானது **(ஆன்மா - அறிவு)** அனைத்து காரணத்திற்கும் காரணமான அந்த **மகத்** என்ற மாயையோடு சேரும்பொழுது, இந்த உலகத்தைப் படைக்கும் **ஈஸ்வரன்** என்று கூறப்படுகின்றது. அதனால், அவரே கர்மபலன்களைக் கொடுப்பவர் என்ற தர்மங்களெல்லாம் வந்து விடுகிறது.

ஆனால், உண்மை என்னவெனில் ஈஸ்வரன் என்பவன் நமக்கு எந்தவித கர்ம பலனையும் கொடுக்கின்ற **கர்மபல தாதா** இல்லை!. ஏனெனில், அந்த ஈஸ்வரனாக நாமே இருப்பதை நம்மால் அறியமுடியாமல் **ஆவரண சக்தி** மறைப்பதினால், நாம் இந்த ஸ்தூல உடல்மீது கொண்ட அபிமானம் காரணமாக, அதனை **"நான்"** என்று கருதிக்கொண்டு, அதன் வாயிலாக செய்யப்படுகின்ற செயல்களாகிய செயல் பலன்கள் (கர்மங்கள்) எல்லாம் நம்மையே வந்து சேருகின்றது. அத்தகைய கர்மங்களேயே நாம் **சஞ்சிதம் ஆகாமியம், பிராரப்தம்** என்கிறோம்.

ஆக, விதை விதைத்தவன் அதன் விளைச்சல்களை அறுவடை செய்து அனுபவிக்க வேண்டிய அவசியம் உள்ளதால், நம்முடைய மனதில் விதைத்த விதைகள் (எண்ணங்கள்) விளை நிலமாகிய உடலின் மூலம் வெளிப்பட்டு, வீரியம் கொண்ட செடிகளாக (செயல்களாக) வெளிப்படுகின்றன.

அந்த விதைகளை (எண்ணங்களை) எரிக்காமல், நாம் என்றுமே நம்முடைய பிறவிப் பெருங்கடலைக் கடக்க முடியாது.

அதாவது, **ஒரு கோவில் கட்ட வேண்டும்!, பகவானுக்கு பட்டாடை வாங்கி உடுத்த வேண்டும்!** என்ற நல்ல எண்ணங்களாக இருப்பினும்கூட, அது இந்தப் பிறவியில் நிறைவேறாத தருணத்தில், அவ்வாறு விதைத்த விதை மற்றொரு

பிறவியில், அதற்கான விளைச்சலைத்தருகின்ற விளை நிலமாகிய இந்த உடல் மூலம் அனுபவத்திற்கு கொண்டு வருகின்றது.

அதன்வாயிலாகவே, நமக்கு கர்மங்களின் ஒட்டுமொத்த சேமிப்புக் கலனாகிய சஞ்சிதகர்மாவாகிய **காரணசரீரம்** இன்னும் அழியாமல் இருக்கின்றது.

ஆகவே, இது என்னுடைய செயல் என்ற கர்த்துருத்துவ புத்திக் கொண்டு, பலவாறான காரியங்கள் செய்யப்படும்போது, அதனுடைய பலா பலன்களை அவன் அனுபவிக்க வேண்டிய அவசியம் இருப்பதினால், அவனை விடாது **சம்ஸார சக்கரம்** துரத்துகின்றது.

இதைத்தான் **தீதும் நன்றும் பிறர்தர வாரா!** என்றனர். ஆகவே, **அவரவர் வினைவழி அவரவர் அனுபவம்**! என்பதினால், இங்கு செயல் செய்பவன் யார்? என்று பார்க்க வேண்டும்.

ஆகவே, ஒன்று மட்டும் நன்றாகப் புரிந்துக்கொள்ளுங்கள் ஒன்றேயாகிய சைதன்யத்தின் சக்தி பலவாறாகப் பரிணமித்து, வந்து போகின்ற பல்வேறு உடல்களின் வாயிலாக ஒரு ஆற்றலை வேறு ஒரு ஆற்றலாக மாற்றமடையச் செய்கின்றது. அதில், வந்து போகின்ற இந்த உடல்களும் அதன் சக்தி வியாபகம் எனும்போது, இதில் சீவனாகிய "**நான்**" என்பவன் அந்த உடல் அல்ல!, அதற்கு ஆதாரமான சைதன்யம் (அறிவு) என்று அறிந்துக் கொள்ளும்போது, அந்த **சைதன்யம்** மாயையோடு சேரும்போது **ஈஸ்வரன்** என்றும், பஞ்சபூதங்களோடு சேரும்போது **சீவன்** என்றும் பெயர் பெறுகின்றது என்பதும் புரிய வரும்.

இதற்கு உதாரணமாக, சில ஆற்றல்களின் தன்மையை நாம் காணும்போது இன்னும் நன்றாக விளங்கிக் கொள்ள முடியும். அதாவது, பஞ்ச பூதங்களில் ஒன்றாகிய தண்ணீரானது சூடாக இருந்தால், அதனுடன் நெருப்பு பூதம் சம்பந்தப்பட்டுள்ளது என நாம் அறிந்து கொண்டதினால், அந்த நீரில் வெப்பத்தை நாம் உணர்கின்றோம்.

அதுவே, அந்த நெருப்பை (ஸ்டவ்வை) அனைத்து விட்டால், நீரானது மீண்டும் தனது இயல்பான குளிர்சியை அடைந்து விடும். இங்கு நீரில் உள்ள உஷ்ணம் என்ற வெப்பமானது நெருப்பு என்ற உபாதியினால் வந்தே தவிர, அந்த நீரினுடைய இயல்பான சுபாவம் அல்ல.

அதுப்போல, ஒரு கண்ணாடி ஸ்படிகம் உள்ளது. அதனருகில் சிகப்பு நிறமுடைய செப்பருத்தி பூ வைக்கப்பட்டால், அந்த ஸ்படிகமும் அந்த சிகப்பு நிறத்தை அடைகின்றது. ஆனால், அந்த சிகப்பு நிறமானது ஸ்படிகத்தின் உண்மை நிறமல்ல!. செம்பருத்திப் பூவின் சிகப்பு நிறம் அந்த ஸ்படிகத்தின்மீது ஏற்றி வைக்கப்பட்டுள்ளது. ஆகவே, உண்மையில் ஸ்படிகத்தின் இயல்பு நிறமற்ற கண்ணாடி போன்ற தூய்மையானது. அதில் எந்த களங்கமுமில்லை.

அதுப்போல, ஒன்றேயான சைதன்ய ஸ்வரூபத்தை பஞ்சகோஷங்களான உடலோடு ஏற்றிப்பார்த்தால், அதை **சீவன்** என்றும், அதுவே அந்த பஞ்ச கோஷங்களான உடலை நீக்கிப்பார்த்தால், இந்த சீவனே பரமாத்ம ஸ்வருபமான **ஈஸ்வரன்** என்பதும் புரியவரும்.

சீவனுடைய உபாதியானது அனைத்திற்கும் காரியமாக இருக்கின்ற **பஞ்சகோசங்கள்** என்றால், ஈஸ்வரனுடைய உபாதியானது அனைத்திற்கும் காரணமாக இருக்கின்ற **மாயை** என்பதை நன்கு அறிந்துக்கொள்ள முடியும்.

ஆகவே, வாக்கியார்த்தத்திலிருந்து, இலட்சியார்த்தத்திற்கு எப்படி வரவேண்டும் என்றால், இந்த சீவனையும், ஈஸ்வரனையும் வேறு வேறாக பார்க்காமல் ஐக்கியப்படுத்திப் பார்க்கவேண்டும்.

அதற்கு, நாம் என்ன செய்ய வேண்டும்? என்றால், நம்மிடம் (சீவனிடம்) உள்ள பஞ்சகோஷங்களை நீக்க வேண்டும். அதுப்போலவே, ஈஸ்வரனிடம் இருக்கின்ற மாயையை நீக்க வேண்டும்.

அவ்வாறு, அந்த இரண்டையும் நீக்கி விட்டால், அதன்பிறகு ஈஸ்வரனிடம் வெறும் அறிவு ஸ்வரூபம் மட்டுமே இருக்கும், அதுப்போல, சீவனிடமும் அதே அறிவு ஸ்வரூபம் மட்டுமே எஞ்சியிருக்கும். இனி! அந்த ஈஸ்வரனுடைய அறிவு பேரறிவு என்றும், சீவனுடைய அறிவு சிற்றறிவு என்றும் கூற வேண்டிய அவசியம் இருக்காது.

ஆக, ஒன்றேயாகிய அந்த ஆன்மா (அறிவு) எல்லா உடல்களின் வாயிலாகவும் **ஒரு அறிவு** முதல் **ஆறு அறிவு** வரை பலவாறாக பிரகாசித்துக் கொண்டிருப்பது என்பது, அததற்கான உடல்களின் தன்மையைக்கொண்டு உள்ளது என்பதை நாம் அறிந்துக் கொள்ள முடியும்.

ஆகவே, உடல்களில் சிக்கிக் கொண்டிருக்கின்றவரை, இந்த அறிவு **(ஆன்மா)** ஒரே அறிவாகத் தெரியாது. அது அறியாமையினால் கலந்து விட்டபடியால், அதை அதே அறிவைக் கொண்டுதான் பிரித்தறிய முடியும்.

இதை எப்படிப் புரிந்துக்கொள்ள வேண்டுமென்றால், நாம் கடைகளில் இருந்து வாங்கிவந்த அரிசி மூட்டையில் கல்லும், அரிசியும் கலந்திருந்தால், அதை அறிவினால் பிரிக்க முடியாது. இது **கல்**, இது **அரிசி** என்ற நம்மிடம் உள்ள அறிவு அதைப்பிரித்து அறிந்தாலும், அதுவே அந்த காரியத்தை செய்துவிடாது. ஏனெனில், அது தன்னிருப்பைக் காட்டிக் கொடுக்கின்ற வெறும் பார்வையாளன் மட்டுமே. ஆனால், அதனுடைய சக்தியாக இந்த உடலைக் கொண்டுதான் **அரிசியும், கல்லும்** கலந்து இருப்பதை நீக்க வேண்டும். ஆக, அது ஒரு செயல் மூலமாகத்தான் முடியும்.

அதேசமயம், அறியாமையினால் கலந்து விட்டதாக நினைக்கும் ஒரு பொருளை அப்படி செயலினால் பிரிக்க முடியாது. அதை அறிவினால் மட்டுமே பிரிக்க முடியும். இந்த இரண்டுக்கும் உள்ள வித்தியாசத்தை இங்கு நன்கு உணர வேண்டும்.

அதாவது, கண்ணாடிப்போன்ற களங்கமற்ற ஒரு ஸ்படிகம் சிகப்பு நிறத்தில் இருப்பதற்குக் காரணம், அதன் அருகே வைக்கப்பட்ட அந்த செம்பருத்தி மலரின் நிறத்தை ஏற்றுக்கொண்டு அவ்வாறு காட்சியாகின்றது. இங்கு அறிவினால் இந்த ஸ்படிகத்தின் நிறம் சிகப்பு அல்ல என்று தெரிந்து விட்டால், அந்த மலரை மட்டும் அந்த ஸ்படிகத்திடமிருந்து பிரித்தால் போதும், அப்போது அந்த ஸ்படிகம் அதன் இயல்பான நிறமற்ற தன்மைக்கு தானாகவே வந்துவிடும்.

அதுப்போலவே, இந்த சீவனுக்கும், ஈஸ்வனுக்கும் இருக்கின்ற இரண்டு உபாதிகளான **சீவனிடமிருக்கின்ற ஐந்து கோஷங்கள், ஈஸ்வரனிடமிருக்கின்ற மாயா** என்ற இந்த உபாதிகளை இதுப்போன்ற சாஸ்திர விசாரங்களின் வாயிலாக

அடைந்த அறிவைனைக்கொண்டு, அவைகள் மீது நமக்கு இருக்கின்ற அபிமானத்தை மட்டும் நீக்கினால்போதும், உண்மையில் **ஈஸ்வரன் என்ற ஒன்று இல்லை!, சீவன் என்ற ஒன்றும் இல்லை!,** இருப்பது **சுத்த பிரஹ்மம்** மட்டுமே என்பது புரியவரும்.

ஆக, எதனிடம் எந்த உபாதியும் இல்லையோ? அதுவே **நிர்குண பிரஹ்மம்** என்பதை அறியவேண்டும்.

இதை இன்னொரு உதாரணக் கதை மூலம் அறியலாம்.

ஒரு மனிதன் இருக்கின்றான், ஒரு நாட்டுக்கு அவன் அரசனாக இருக்கின்றான். அந்த நாடே அவனுக்கு அடிமையாக இருக்கின்றது. பிறகு அந்த மனிதனுக்கு ஒரு பெயர் வருகின்றது. அது '**ராஜா**' என்பதாகும்.

பிறகு இன்னொரு மனிதன் இருக்கின்றான். அந்த மனிதன் அந்த ராஜாவுக்கு காவலாளியாக இருக்கின்றான். அந்த காவலாளி தன்வசம் அனைத்து ஆயுதங்களையும் தாங்கிய ராஜாவுக்கு ஒரு பாதுகாவலனாக இருப்பான்.

ஒரு மனிதனிடம் கிரீடம் என்ற ஒன்று இருப்பதினால் அவன் **அரசன்** என்றும், மற்றொரு மனிதனிடம் ஆயுதங்கள் இருப்பதினால், அவனை அரசனுக்கு **காவலாளி** என்றும் அழைக்கப்படுகின்றான்.

இப்பொழுது ராஜாவிடம் இருகின்ற ராஜ்ஜியத்தை பறித்து விட்டோம் என்றால், அவர் இனி ராஜா அல்ல. அதுப்போல, அந்த காவலாளியிடம் இருக்கின்ற ஆயுதங்களைப் பறித்து விட்டால், அவன் இனி காவலாளியும் அல்ல. இந்த **ராஜா, காவலாளி** என்ற தன்மை அவர்களது ஸ்வபாவமோ, ஸ்வரூபமோ அல்ல!. அது அந்த ராஜ்ஜியத்தினாலும், ஆயுதத்தினாலும் அவர்களுக்கு தற்காலிகமாக கிடைத்த ஒரு வித **பதவி** ஆகும்.

இப்பொழுது இருவரையுமே ராஜா மற்றும் காவலாளி என்று வேறு வேறாகப் பார்க்காமல், சாதாரணமான மனிதர்களாக எப்படி பார்ப்போமோ, அதுப்போல, வாக்கியார்த்தத்தின் அடிப்படையில் ஈஸ்வரனான ராஜாவும்,

அவருக்கு சேவை செய்கின்ற சீவனும் இந்த உலகம் இருக்கும்வரை அந்தந்த பதவியில் இருப்பது போலத் தெரியும்.

அதாவது, இந்த உடல் என்ற உபாதி இருக்கும் வரை ஈஸ்வரன் நம்மை ஆள்பவர், நாம் அவருக்கு சேவை செய்பவர்கள் என்பது நம் மனதினால் ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்களால் எழுந்த அறியாமை ஆகும்.

அதுவே, நாம் இலட்சியார்த்தத்திற்கு வந்தால், இந்த இரண்டு உபாதிகளையும் அறிவினால் நீக்கினால், ஈஸ்வரனும், சீவனும் வேறு வேறல்ல என்பது தெள்ளத் தெளிவகப் புரியும்.

மீண்டும் இங்கு **வாக்கியார்த்தம்** மற்றும் **இலட்சியார்த்தம்** என்ற கருத்துக்கு வருகின்றோம். நாம் சாதாரணமாக ஒரு வார்த்தையை பேசும் பொழுது, அந்த வார்த்தையின் பொருளைக் கேட்டவுடன் அதன் நேரடியான பொருளைத்தான் முதலில் எடுத்துக்கொள்ள முயல்வோம். இதில் ஒருக்கால் நேரடியான பொருள் பொருந்தி வரவில்லையென்றால், நம்மை அறியாமல் அதன் சம்பந்தப்பட்ட மற்றொரு பொருளை எடுத்துக்கொள்ள முயற்சி செய்வோம்.

இதற்கு உதாரணமாக, ஒரு தந்தை மகனை பார்த்து கோபத்தில் "**நீ எங்காவது தொலைந்து போ**!" என்று கோபத்தில் திட்டினார் என்றால், அதற்கு அவர் மகன் எப்படி பொருள் எடுத்துக் கொள்வார்?

அவர் தற்பொழுது கோபமாக உள்ளார். ஆதலால், நாம் அவரிடமிருந்து சிறிது நேரம் ஒதுங்கி இருப்பது நல்லது என்று எடுத்துக்கொள்வாரா? அல்லது தொலைந்துப் போ! என்று கூறிவிட்டார். இனி நான் அவர் கூறியபடி தொலைந்து போகலாம் என்று நினைப்பாரா?

அவரது கோபம் போய்விட்டால் அந்த வார்த்தைக்கு அர்த்தம் இல்லை என்பதினால், சிறிது நேரம் ஒதுங்கி இருப்பார். பிறகு தந்தையின் கோபம் போனவுடன் சிறிது நேரம் கழித்து மீண்டும் அவரை சந்திப்பார். அவரது தந்தையும் தான் திட்டியதை மறந்து இருப்பார்.

இதுதான் சூழ்நிலைக்கு தகுந்தாற்போல் பொருள் எடுத்துக்கொள்வது என்கிறோம். இந்த இடத்தில் வாக்கியார்த்தம் பொருந்தவில்லை என்பதால் நாம் இலட்சியார்த்தத்தை எடுத்துக்கொள்கிறோம்.

அதனால்தான், நாம் பேசுகின்ற வார்த்தையை வைத்து எதையும் முடிவு செய்ய முடியாது. நாம் என்ன உணர்வுடன் பேசுகிறோம் என்பதை மற்றவர்கள் எப்படிப் புரிந்துக் கொள்வார்கள் என்பதில்தான் அவர்களுடைய புரிதல் இருக்கின்றது.

சிலருடைய வாழ்க்கையில் பிரச்சனைகள் ஏன் வருகின்றது? என்றால், அவர் கூறிய வார்த்தையின் பொருள் தவறகப் புரிந்துக் கொள்வதினால் வருகின்றது. நான் இந்த வார்த்தையைத்தான் கூறினேன் உனக்கு ஏன் கோபம் வந்தது? என்ற கூறுவதைப் பலரும் கேட்டிருக்கின்றோம்.

ஆக, ஒருவரது வார்த்தை வெளிப்படுவதிலுள்ள வாக்கிய அர்த்தத்தின் நிலைப்பாடு, இலட்சிய அர்த்தத்தில் மாறுபடலாம். அதை நாம் நன்கு புரிந்து கொள்ள வேண்டும்.

ஆகவே, நம்முடைய அன்றாட வாழ்க்கையில் நாம் பேசுகின்ற வார்த்தைக்கும், அந்த வார்த்தையினால் நாம் குறிப்பிடுகின்ற அர்த்தத்திற்கும் வேற்றுமை இருக்கின்றது.

அத்தகைய இலட்சிய அர்த்தங்கள் என்ற இலட்சியார்த்தத்திற்கு மூன்று விதமான பொருள்கள் உள்ளன.

முதல் விதமான இலட்சியார்த்தத்திற்கு **ஜெகல் இலக்ஷ்சணா** என்று பெயர். ஜெகல் என்றால் விட்டுவிடுதல் என்று பொருள். தமிழில் இதனை **"விட்ட இலட்சணை"** என்று கூறுவார்கள்.

இரண்டாவது **அஜெகல் இலக்ஷ்சணா** என்று பெயர். இதனை தமிழில் **"விடாத இலட்சணை"** என்று பொருள்.

மூன்றாவது **ஜெகாஜெகல் இலக்ஷ்சணா** என்று பெயர். இதனை தமிழில் "**விட்டும், விடாத இலட்சணை**" என்று பெயர். அதாவது பாதியை விட்டு விட்டு, பாதியை விடாத இலட்சணை ஆகும்.

இது நாம் அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்துகின்ற முறைகள்தான். ஆனால் சமஸ்கிருதத்தில் கேட்டவுடன் ஏதோ புதிதாக உள்ளதாக நினைத்துக் கொள்ளக்கூடாது.

இப்பொழுது முதலில் "**விட்ட இலட்சணை**" (ஜெகல் இலக்ஷ்சணா) என்றால் என்ன? என்று பார்க்கலாம்.

"**விட்ட இலட்சணை**" என்றால், விட்டு விடுகின்ற இலட்சணை.

எதை விட்டுவிடுவது?

அதாவது, ஒரு வர்த்தையை நாம் பயன்படுத்துகின்றோம், அந்த வார்த்தையினுடைய முழு அர்த்தத்தை அப்படியே விட்டுவிட்டு, புதியதாக வேறு ஒரு அர்த்தத்தை எடுத்துக்கொண்டால், அது "**விட்ட இலட்சணை**" எனப்படும்.

உதாரணமாக, கிரிக்கெட் விளையாட்டில் நாம் **இந்தியா விளையாடுகிறது** என்கின்றோம். இந்த வார்த்தையில் **இந்தியா** என்ற சொல்லுக்கு என்ன பொருள்? இந்தியா என்பது ஒரு நாடு அல்லது தேசம். அதாவது, தேசம் என்றல் இடம் என்று பொருள். ஆக, இந்த ஒரு எல்லைக்குட்பட்ட இடமான இந்தியா என்ற தேசமா, மற்றொரு இடமான ஆஸ்திரேலியா என்ற தேசத்துடன் (இடத்துடன்) விளையாடுகிறது.

உண்மையில், அந்த இரண்டு இடங்களும் (தேசங்களும்) எங்கும் நகர்வதில்லை. **இந்தியா விளையாடுகிறது** என்ற வார்த்தையை எடுத்துக் கொண்டால், இந்த இந்தியாவில் இருக்கின்ற விளையாட்டு வீரர்கள் மற்றொரு நாடான ஆஸ்திரேலியா விளையாட்டு வீரர்களுடன் விளையாடுகிறார்கள் என்பதை புரிந்துக் கொள்கிறோம்.

அதாவது, இந்தியா என்பது ஒரு இடத்தினுடைய பெயர். அதை விட்டு விட்டு இந்தியாவில் உள்ள விளையாட்டு வீரர்களை எடுத்துக்கொள்கிறோம். இங்கு வாக்கியார்த்தத்தை முழுமையாக விட்டுவிட்டு வாக்கியார்த்தத்துடன் சம்பந்தப்பட்ட வேறு ஒரு அர்த்தத்தை எடுத்துக்கொள்வதுதான் "**விட்ட இலட்சணை**" என்கிறோம்.

அடுத்து, "**விடாத இலட்சணை**" (அஜெகல் இலக்ஷ்சணா) என்றால், வாக்கிய அர்த்தத்தை தியாகம் செய்யாமல், வாக்கிய அர்த்தத்தை அவ்விதமே வைத்துக்கொண்டு, அந்த வாக்கியார்த்தத்துடன் வேறு ஒன்றையும் சேர்த்துக் கொள்கிறோம்.

இது, "**விடாத இலட்சணை**" எனப்படும். அதாவது, அந்த வாக்கியார்த்தத்தை விடாமல், வேறு ஒரு அர்த்தம் வாக்கியார்த்தத்துடன் சேர்த்துக் கொள்ளப்படுகின்றது. அதை "**விடாத இலட்சணை**" என்கின்றோம்.

இன்னும் ஒரு உதாரணம் என்னவெனில், ஒருவரிடம் தாங்கள் **குடிக்க தண்ணீர் கொண்டு வாருங்கள்** என்று கேட்கிறீர்கள் என வைத்துக் கொள்வோம். அவரும் ஒரு டம்பளரில் தண்ணீர் கொண்டு வருகின்றார்.

அப்பொழுது தாங்கள், நான் தண்ணீரைத்தானே கேட்டேன். நீங்கள் என்ன டம்பளரையும் சேர்த்துக்கொண்டு வந்துள்ளீர்கள் என்று கேட்பீர்களா?

இல்லை! அவரும் இவர் தண்ணீர்தானே கேட்டார் எப்படி தண்ணீர் மட்டும் கொண்டு செல்வது? என்று யோசிப்பாரா!, அப்படியெல்லாம் அவர் யோசிக்காமல் உடனடையாக ஒரு டம்பளரில் தண்ணீரைக் குடிக்க கொண்டு வருவார்.

காரணம், தண்ணீர் என்று கூறும்போதே, அந்த தண்ணீரை அவர் விட்டு விடவில்லை, தண்ணீருடன் அதை கொண்டு வரும் பாத்திரத்தையும் சேர்ந்து புரிந்துக்கொண்டு அந்த தண்ணீரை அவர் கொண்டு வருகின்றார்.

இதைத்தான் "**விடாத இலட்சணை**" என்கின்றோம்.

மூன்றாவது என்னவெனில், "**விட்டும், விடாத இலட்சணை**" எனப்படும். இதில் பாதியை விட்டுவிட்டு, பாதியை வைத்துக் கொள்கின்றோம். அதாவது, பாதியை விட்டு விடுகின்றோம், மீதியை விடாமல் வைத்தும் கொள்கின்றோம்.

இதற்கு, ஏற்கனவே பார்த்த ஒரு உதாரணம் கூறவேண்டுமென்றால், இப்பொழுது ஒருவர் நம்மிடம் மாம்பழத்தைக்கொடுத்து சாப்பிடுங்கள் என்கிறார் என வைத்துக்கொள்ளுங்கள்.

நாம் என்ன செய்வோம்?!

அவர் மாம்பழத்தை சாப்பிடக்கூறியுள்ளார். ஆகவே, நாம் அந்த மாம்பழத்தின் தோல், கொட்டை முதலிய அனைத்தையும் சாப்பிட்டு விடவேண்டும் என்று கருதுவோமா?

இல்லை!

இங்கு வாக்கியார்த்தம் மாம்பழத்தைச் சாப்பிடுங்கள் என்பது, ஆனால், இங்கு நாம் புரிந்துக்கொள்வது என்னவெனில், **மாம்பழத்தை சாப்பிடுங்கள்** என்று கூறினாலும்கூட, அதில் உள்ள கொட்டை, தோலை சாப்பிடக்கூடாது என்பது நமக்கு நன்கு புரியும்.

அதில் சாப்பிடவேண்டிய பகுதிகளை மட்டுமே சாப்பிடுவோம். இங்கு, இந்த இடத்தில் **மாம்பழத்தை சாப்பிடுங்கள்** என்ற வார்த்தையை நாம் அப்படியே பொருள் எடுத்துக்கொள்ளாமல், அதிலிருக்கின்ற பாதியை சாப்பிட்டுவிட்டு, பாதியை விட்டு விடுகின்றோம். இதுதான் "**விட்டும், விடாத இலட்சணை**" (ஜெகாஜெகல் இலக்ஷ்சணா) எனப்படுகின்றது.

சரி! இப்பொழுது விஷயத்திற்கு வருவோம்.

தற்பொழுது நம்மிடம் **சீவன், ஈஸ்வரன்** என்ற இரண்டு தத்துவங்கள் இருக்கின்றன. இந்த இரண்டு தத்துவங்களின் வாக்கியார்த்தத்தை விட்டு விட்டு இலட்சியார்த்தத்திற்கு போகவேண்டும்.

இதில், இந்த மூன்று விதமான இலட்சியார்த்தத்தில் எந்த விதமான இலட்சியார்த்தத்தை கையாளவேண்டும் என்றால், சீவனிடத்தில் "**விட்டும், விடாத இலட்சணை**" யைக் கையாளவேண்டும். அதாவது **ஜெகாஜெகல் இலக்ஷசணா** - வைக் கையாளவேண்டும்.

எப்படியென்றால், ஒவ்வொரு சீவனையும் நாம் **ஆத்மா, அனாத்மா** என்று இரண்டாக பிரித்துள்ளோம்.

**ஆத்மா** என்றால் அறிகின்ற அறிவு ஸ்வரூபம், **அனாத்மா** என்றால் பஞ்சகோஷங்கள் என்று சீவனை இரண்டு கூறாக மனதிற்குள் பிரித்து வைத்துள்ளோம்.

அதுப்போல, ஈஸ்வரனையும் இரண்டாக பிரித்து வைத்துள்ளோம். **சத்தியம், ஞானம், அனந்தம்** என்ற பிரம்மமாகவும், பிறகு இந்த ஜகத்திற்கே காரணமாக இருக்கின்ற **மாயை** என இரண்டாக பிரித்து வைத்துள்ளோம்.

இங்கு சீவனையும், ஈஸ்வரனையும் இணைக்கவேண்டுமென்றால், இங்கு "**விட்ட இலட்சணை**" (ஜெகல் இலக்ஷசணா) எடுக்க முடியாது.

காரணம் சீவனிடத்திலுள்ள அனைத்தையும் விட்டுவிட முடியாது. ஏனெனில், சீவனிடத்தில் என்றும் அழியாத நித்தியமான ஒரு சைதன்யம் இருக்கின்றது. ஆகவே "**விட்ட இலட்சணை**" என்ற ஜெகல் இலக்ஷசணா சரியாக வராது.

பிறகு, "**விடாத இலட்சணை**" (அஜெகல் இலக்ஷசணா) எடுத்துக் கொள்ளலாமா? என்றால், அதுவும் முடியாது. காரணம், சீவனிடம் ஏற்கனவே சம்ஸாரத்தைக் கொடுக்கின்ற **பஞ்சகோஷங்கள்** இருக்கின்றன. அவன் இந்த உடலில் இருக்கின்றவரை அதை விட்டுவிட முடியாது. அத்துடன், அந்த கோஷங்கள் இருக்கின்ற வரைக்கும் அவன் ஈஸ்வரனுடன் இணையமுடியாது.

ஆகவே, சீவனிடம் இருக்கின்ற எல்லா தன்மைகளையும் விட்டு விட்டு புதியதாக எதை ஒன்றையும் சேர்க்க முடியாது. எனவே, “**விடாத இலட்சணை**” என்ற அஜெகல் இலக்ஷ்சணா - வும் சரியாக இருக்க முடியாது.

தற்பொழுது, “**விட்டும், விடாத இலட்சணை**” (ஜெகாஜெகல் இலக்ஷ்சணா) எடுத்துக்கொண்டால் சரியாக வரும்.

எப்படியென்றால், ஜீவனிடம் ஒரு பகுதியை வைத்துக்கொள்கின்றோம், ஒரு பகுதியை விட்டு விடுகின்றோம். இதில் சைதன்ய அம்ஸத்தை வைத்துக் கொண்டு, பஞ்சகோஷங்களைத் தியாகம் செய்கின்றோம்.

இங்கு ஒன்றைவிட்டு, ஒன்றை விடாமல் வைத்துக்கொள்வதால் “**விட்டும், விடாத இலட்சணை**” என்பது சரியாக இருக்கும்.

அதுப்போல, ஈஸ்வரனிடத்தில் **மாயை - யை** (ஜகத்தை) விட்டு விடுகின்றோம். அந்த சைதன்யத்தை வைத்துக்கொள்கின்றோம்.

இப்படி சீவனிடமும், ஈஸ்வரனிடமும் **விட்டும் விடாத இலட்சணை** யைக் கையாண்டால்தான் சீவனிடம் உள்ள சைதன்யமும், ஈஸ்வரனிடத்தில் உள்ள சைதன்யமும் நமக்கு ஒன்றாகக் கிடைக்கும்.

ஆதலால், சீவனிடமும், ஈஸ்வரனிடமும் உள்ள உடல்கள் என்ற உபாதியானது நீக்கப்பட வேண்டி இருப்பதினால், இந்த **விட்டும் விடாத இலட்சணை** மூலமாகத்தான் சீவனிடமும், ஈஸ்வரனிடமும் உள்ள சைதன்யத்தை நாம் அணுக வேண்டும்.

ஆக, “**விட்டும், விடாத இலட்சணை**” என்ற ஜெகா ஜெகல் இலக்ஷ்சணாவினால்தான் நாம் இந்த இருவரையும் ஒன்றாக ஐக்கியப்படுத்த முடியும்.

சைதன்யத்தை மட்டும் வைத்துக்கொண்டு சீவனுக்கும், பிரஹ்மனுக்கும் இடையில், பொதுவாக இருக்கின்ற அறிவு ஸ்வரூபமான பிளவுபடாத தன்மையான ஆன்மாவை அறிஞர்களால்தான் அறியப்படுகின்றது.

ஆக, **சீவன் = ஈஸ்வரன்** என்பதை, வாக்கியார்த்தத்தின் அடிப்படையில் விட்டுவிட்டு, இலட்சியார்த்தத்தின் அடிப்படையில் இரண்டும் ஒன்றுதான் என்று, இந்த இரண்டையும் ஒன்றாகச் சமன் செய்யப்படுகின்றது.

இந்த சீவனையும், பிரஹ்மனையும் ஒன்றுதான் என்பதை ஒன்றிரண்டு மஹாவாக்கியம் மட்டும் கூறவில்லை, இதுப்போன்ற நூற்றுக்கணக்கான மஹாவாக்கியங்கள் இரண்டும் ஒன்றுதான் என்று கூறுகின்றன.

காரணம், ஒவ்வொரு உபநிஷத்திலும் ஒவ்வொரு மஹாவாக்கியம் இருக்கும். சில உபநிஷதங்களில் பல மஹா வாக்கியங்கள் இருக்கின்றன.

**உபநிஷத்** என்றாலே மஹாவாக்கியத்தை போதிக்கின்றது என்று பொருள். ஆக, உபநிஷதங்களின் மையக்கருத்தே மஹாவாக்கிய ஞானத்தைக் கொடுப்பது ஆகும். **மஹாவாக்கியம்** என்றாலே **சீவபிரஹ்ம ஐக்கியம்** என்று பொருள்.

அப்படிப்பட்ட பிரஹ்மத்துக்கும், ஆத்மாவுக்கும் உள்ள பிளவுபடாத பூர்ணமான ஐக்கியத் தன்மையை நூற்றூக்கணக்கான மஹாவாக்கியங்களினால் கூறப்படுகின்றது.

**ஓம் தத் ஸத்!**

# சீவபிரஹ்ம ஐக்கியம்

## "தத்வமஸி"

(நீ அதுவாகவே இருக்கிறாய்!)



சுவாமி பிரபஞ்சநாதன்